2575



ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2017 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2017 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2017

ක්‍රිස්තියානි ශිෂ්ටාචාරය I
கிறிஸ்தவ நாகரிகம் I
Christian Civilization I

49 T I

පැය දෙකයි
இரண்டு மணித்தியாலம்
Two hours

**அறிவுறுத்தல்கள் :**

* **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
* விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை** எழுதுக.
* விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.
* 1 தொடக்கம் 50 வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து, **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய** விடைத்தாளில் **புள்ளடி** (×) இடுவதன் மூலம் காட்டுக.

1. யூத நாகரிகத்தில் செல்வாக்குச் செலுத்திய ஆசிய நாகரிகங்கள்
   (1) கிரேக்க, பபிலோனிய, சுமேரிய நாகரிகங்கள்
   (2) உரோம, சுமேரிய, மொசப்பத்தேமிய நாகரிகங்கள்
   (3) அசீரிய, சுமேரிய, கிரேக்க நாகரிகங்கள்
   (4) அசீரிய, பபிலோனிய, சுமேரிய நாகரிகங்கள்
   (5) எகிப்திய, சுமேரிய, கிரேக்க நாகரிகங்கள்

2. யூப்பிரதீஸ் - தைக்கிரிஸ் ஆற்றங்கரை நாகரிகம் பற்றிய **பொருத்தமற்ற** கூற்று
   (1) ஆட்சிசெய்யும் உரிமையைக் கடவுளே அரசனுக்கு வழங்கியிருப்பதாக மக்கள் நம்பினர்.
   (2) ஆட்சி நிர்வாகத்திற்குத் தேவையான நிதி வரி மூலம் பெறப்பட்டது.
   (3) முதன்முதலில் நாணயங்களின் பயன்பாடு இந்நாகரிகத்திலேயே ஆரம்பித்தது.
   (4) கனவுகளுக்குப் பலன்கூறும் பழக்கம் இம்மக்களிடம் காணப்பட்டது.
   (5) விளக்கெண்ணெய், பேரீச்சம்பழம், அத்திப்பழம் என்பன மருந்துகளாகப் பயன்படுத்தப்பட்டன.

3. யூத கலாசாரத்திற் செல்வாக்குச் செலுத்திய கிரேக்க கலாசாரக் கூறுகளாவன
   (1) நிர்வாகம், சமய பழக்க வழக்கம், முகாமைத்துவம்
   (2) மெய்யியல், இலக்கியம், கணிதம்
   (3) கட்டடக்கலை, சிற்பம், ஓவியம்
   (4) விவசாயம், விலங்குப்பண்ணை, நாணயங்களின் பாவனை
   (5) சமய பழக்க வழக்கங்கள், கட்டடக்கலை, சிற்பம்



4. பெலிஸ்தியாவில் **காணப்படாத** நகரம்
   (1) அஸ்கெலோன் (2) ஸ்தோத் (3) காசா
   (4) எக்ரோன் (5) ஜெரிக்கோ



5. ஏதோம் பபிலோனியாவினால் கைப்பற்றப்பட்ட ஆண்டு
   (1) கி.மு. 315 (2) கி.மு. 333 (3) கி.மு. 587
   (4) கி.மு. 597 (5) கி.மு. 604

6. தாவீதைத் திருப்பொழிவு (அபிஷேகம்) செய்தவர்
   (1) சாமுவேல் (2) யெஸ்சே (3) சவுல்
   (4) ஏலி (5) மெல்கிசேதேக்

7. கி.மு. 315 இல் தொலமி ஜெருசலேமைக் கைப்பற்ற ஏதுவான காரணி
   (1) அசீரியர்கள் தொலமிக்கு உதவியமை
   (2) மகா அலெக்சாண்டரின் மரணத்தினால் ஏற்பட்ட அரசியல் தளம்பல் நிலைமை
   (3) அந்தியோக்கஸ் எப்பிபானுஸ் என்பவரின் மரணத்தால் ஏற்பட்ட அரசியல் தளம்பல் நிலைமை
   (4) உரோமர்களின் தலையீடு
   (5) பலஸ்தீனர்களின் புரட்சி

[பக். 2 ஐப் பார்க்க

8. இயேசுவின் காலத்தில் யூத சமூகத்தில் குடும்பத் தலைவனாகிய தந்தையின் பொறுப்பாக **இல்லாதிருந்தது** யாது ?
(1) வயலில் நல்ல விதைகளை விதைத்தல்
(2) திருடர்களிடமிருந்து உடைமைகளைப் பாதுகாத்தல்
(3) குடும்பத்தில் பாஸ்கா செம்மறியைப் பலியிடுதல்
(4) ஊழியர்களுக்கான பணிகளைக் கையளித்தல்
(5) வரி செலுத்துதல்

9. மேல்வருவனவற்றுள் 'விடுதலைப் பயணம்' பற்றிய **தவறான** கூற்று
(1) இஸ்ரயேலர் எகிப்தில் அடிமைகளாக வாழ்ந்தனர்.
(2) இஸ்ரயேலரின் விடுதலைப் போராட்டத்திற்கு மோசே தலைமைத்துவம் வழங்கினார்.
(3) விடுதலைப் பயணக் காலத்தில் பாரவோன் யோசேப்புப் பற்றி எதுவும் அறியாதிருந்தான்.
(4) இஸ்ரயேலர் கலிலேயாக் கடலைக் கடந்து பாலைவனத்தை அடைந்தனர்.
(5) இஸ்ரயேலர் பாஸ்கா உணவை உண்ட பின் எகிப்திலிருந்து புறப்பட்டனர்.

10. உடன்படிக்கை பற்றிய மேல்வரும் கூற்றுகளைக் கருதுக.
A - முன்னுரையில் அரசனின் பெயரும் பட்டங்களும் உள்ளடக்கப்படும்.
B - இடைக்கிடையே ஆலயத்தில் படிக்கப்படும்.
C - எரே 31 : 31 - 33 என்பது இரு பகுதியினரையும் உள்ளடக்கிய பகுதியாகும்.
D - சாட்சியாக தெய்வங்களின் பெயர்ப்பட்டியல் இடம்பெறும்.
E - சமய விடயங்கள் சார்ந்தவையாக மாத்திரம் காணப்படும்.

இவற்றுள் உடன்படிக்கை தொடர்பான சரியான கூற்றுகள் யாவை ?
(1) A, B, C (2) A, B, D (3) B, C, D (4) B, D, E (5) C, D, E

11. காணாமற்போன 'டிடாக்கே' மீண்டும் எந்த நூற்றாண்டில் கண்டெடுக்கப்பட்டது ?
(1) கி.பி. 4 (2) கி.பி. 5 (3) கி.பி. 6 (4) கி.பி. 18 (5) கி.பி. 19

12. கிறிஸ்தவர்களால் முதன்முதலில் எப்போது நோன்பு கடைப்பிடிக்கப்பட்டது ?
(1) வெள்ளிக்கிழமைகளில் (2) சனிக்கிழமைகளில்
(3) தவக்காலத்தில் 40 நாட்கள் (4) புதன்கிழமைகளிலும் வெள்ளிக்கிழமைகளிலும்
(5) திருவருகைக் காலத்திலும் தவக்காலத்திலும்

13. மேல்வருவோருள் யாரிலிருந்து எருசலேம் ஆலயக்குருக்கள் தெரிவுசெய்யப்பட்டனர் ?
(1) லேவி குலமரபின் ஆரோன் குடும்பத்திலிருந்து
(2) லேவி குலமரபின் யாக்கோபு குடும்பத்திலிருந்து
(3) யூதா குலமரபின் அரச குமாரர்களிலிருந்து
(4) பெஞ்சமின் குலமரபிலிருந்து
(5) லேவி குலமரபில் திருமணமாகாதவர்களிலிருந்து

14. இயேசுவின் காலத்தில் யூத சமூகத்தில் உயர் வகுப்பைச் சார்ந்தவர்கள் யாவர் ?
(1) சதுசேயரும் தீவிரவாதிகளும் (2) எசேனியரும் தீவிரவாதிகளும்
(3) சதுசேயரும் பரிசேயரும் (4) எசேனியரும் பரிசேயரும்
(5) பரிசேயரும் தீவிரவாதிகளும்

15. கிறிஸ்துவின் தாழ்ச்சி பற்றிக் கூறும் விவிலியப் பகுதி யாது ?
(1) I தெச. 5 : 1 - 10 (2) பிலி. 2 : 5 - 11 (3) உரோ. 6 : 3 - 9
(4) எபே. 1 : 3 - 10 (5) எபே. 2 : 5 - 11

16. 'கத்தோலிக்க திருச்சபை' என்பதனை முதன்முதலில் பயன்படுத்தியவர்
(1) புனித யஸ்ரின் (2) புனித இரேனியுஸ்
(3) அந்தியோக்கு புனித டயோனிசியஸ் (4) அந்தியோக்கு புனித இஞ்ஞாசியார்
(5) புனித பீலிக்ஸ்

17. மறைக்கல்விக்கு உரிய முக்கியத்துவம் வழங்கி 1551, 1556, 1558 ஆகிய ஆண்டுகளில் மறைக்கல்வி நூல்களை எழுதி வெளியிட்டவர்
(1) புனித சாள்ஸ் பொரோமெயோ (2) புனித பிலிப்பு நேரி
(3) புனித பீற்றர் கனீசியஸ் (4) புனித பிரான்சிஸ் டி சலேசியார்
(5) புனித வின்சன்ட் டி பவுல்

**18.** மேல்வரும் கூற்றுகளைக் கருத்திற் கொள்க.

A - திருத்தெந்து சங்கம் 1570 இல் இத்தாலியில் கூட்டப்பட்டது.

B - திருத்தெந்து சங்கத்தின் பின்பு திருச்சபையில் ஒற்றுமை ஏற்பட்டது.

C - திருச்சபையின் மறை உண்மைகளை விளக்குவது இச்சங்கத்தின் முக்கிய நோக்கமாகும்.

D - திருச்சபையில் உள்ளார்ந்த மறுமலர்ச்சியை ஏற்படுத்துவது இதன் மற்றுமொரு நோக்கமாயிருந்தது.

E - திருச்சபையின் ஒழுக்கம், தார்மீகம் என்பவற்றை உயர்த்துதல் இதன் நோக்கங்களிலொன்று.

இவற்றுள் திருத்தெந்து சங்கம் பற்றிய சரியான கூற்றுகள் யாவை ?

(1) A, B, C (2) A, D, E (3) B, C, D (4) B, C, E (5) C, D, E

**19.** மேல்வரும் கூற்றுகளைக் கருத்திற் கொள்க.

A - சீனாவில் கத்தோலிக்கம் பரப்பப்படுவதற்கு மத்தியு ரிச்சி அடிகள் காரணமாயிருந்தார்.

B - சீனாவில் கத்தோலிக்க மறையின் பின்னடைவிற்கு உரோமைய ஆட்சிபீடம் பொறுப்பல்ல.

C - மறையின் பரம்பலுக்குப் பண்பாட்டு மயமாக்கல் இன்றியமையாத தேவையல்ல.

D - கி.பி. 1700 இல் 300 000 இற்கு மேற்பட்ட சீன மக்கள் கத்தோலிக்க மறையைத் தழுவியிருந்தனர்.

E - கி.பி. 1615 இல் திருத்தந்தை V ஆம் பவுல் சீன மொழியில் வழிபாடுகளை நடத்த அனுமதியளித்தார்.

இவற்றுள் சீனாவில் கத்தோலிக்கம் பற்றிய சரியான கூற்றுகள் யாவை ?

(1) A, B, C (2) A, B, D (3) A, D, E (4) B, C, D (5) C, D, E

**20.** புனித யோசப்வாஸ் எந்த ஆண்டு அருளாளர் (முத்திப்பேறு) நிலைக்கு உயர்த்தப்பெற்றார் ?

(1) 1990 (2) 1994 (3) 1995 (4) 2000 (5) 2015

**21.** புனித யோசப்வாஸ் இற்கு அவரது பணியின்போது உதவிய சிங்கள பௌத்த மன்னர்கள் யாவர் ?

(1) II ஆம் விமலதர்மசூரியனும் II ஆம் இராஜசிங்கனும்
(2) மாயாதுன்னையும் நரேந்திரசிங்கனும்
(3) II ஆம் விமலதர்மசூரியனும் நரேந்திரசிங்கனும்
(4) II ஆம் இராஜசிங்கனும் மாயாதுன்னையும்
(5) மாயாதுன்னையும் VII ஆம் புவனேகபாகுவும்

**22.** 'பேதக மறுப்பு' (Against Hereses) என்னும் நூலை எழுதியவர்

(1) புனித கிறகோரி நாசியான்சன் (2) புனித பசில் (3) புனித அத்தனாசியுஸ்
(4) புனித அம்புரோசியார் (5) புனித இரேனியுஸ்

**23.** புனித அம்புரோசியார் கத்தோலிக்க மறையைத் தழுவுவதற்கு முன்னர் பின்பற்றிய பேதகம்

(1) ஆரிய பேதகம் (2) மனிக்கேய பேதகம் (3) தொனாத்திய பேதகம்
(4) பெலாயிய பேதகம் (5) நெஸ்ரோரிய பேதகம்

**24.** திருவிவிலியத்தை இலத்தீன் மொழியில் மொழிபெயர்ப்பதற்கு முன்னோடியாகத் திகழ்ந்தவர்

(1) திருத்தந்தை தமாஸ்கஸ் (2) திருத்தந்தை II ஆம் பெனடிற்
(3) திருத்தந்தை பொனிபஸ் (4) திருத்தந்தை II ஆம் கிளமென்ற்
(5) திருத்தந்தை II ஆம் கிறகோரி

**25.** மத்திய காலத்தில் (கி.பி. 800 - 1500) சமூகத்தின் பக்திநிலை குறைந்து ஆன்மீக வாழ்வில் தளர்ச்சிநிலை ஏற்படக் காரணம்

(1) திருச்சபைத் தலைவர்கள் சிலுவைப் போரில் அதிக கவனம் செலுத்தியமை
(2) குருக்கள் பணம், சொத்துகளைத் திரட்டுவதில் அதிக கவனம் செலுத்தியமை
(3) சில குருக்கள் திருச்சபைக்கு எதிராக மக்களைத் தூண்டியமை
(4) கல்வி அறிவில்லாத மக்களுக்கு குருகுலத்தைச் சேர்ந்தவர்கள் மறையைப் போதிக்கத் தவறியமை
(5) ஆட்சியாளர் திருச்சபையின் நிர்வாகத்தில் தலையிட்டமை

**26.** திருவிவிலியம் இலத்தீன் மொழியில் மொழிபெயர்க்க வேண்டிய தேவை ஏற்பட்டதற்கான காரணம்

(1) இலத்தீன் நிர்வாக மொழியாக விளங்கியமை
(2) இலத்தீன் வழிபாட்டு மொழியாகக் காணப்பட்டமை
(3) இலத்தீன் ஏனைய ஐரோப்பிய மொழிகளுக்குத் தாய்மொழியாக விளங்கியமை
(4) திருச்சபைச் சட்டங்கள் இலத்தீன் மொழியில் ஆக்கப்பட்டமை
(5) உரோமைப் பேரரசில் இலத்தீன் மொழியின் செல்வாக்கு உயர்நிலையில் காணப்பட்டமை

**27.** ஐரோப்பிய பழங்குடி மரபினர் பற்றிய மேல்வரும் கூற்றுகளைக் கருதுக.

A - விவசாயத்திலும் மந்தை வளர்ப்பிலும் ஈடுபட்டனர்.

B - ஒவ்வொரு குலமும் ஓர் அரசனால் ஆளப்பட்டது.

C - மக்கள் சுதந்திரமும் சுய மரியாதையும் கொண்டு விளங்கினர்.

D - அதிகமான குலங்கள் இராணுவத்தைக் கொண்டிருந்தன.

E - உயர்ந்த கல்வி நிலை காணப்பட்டது.

இவற்றுள் சரியான கூற்றுகளாவன

(1) A, B, C (2) A, B, D (3) A, C, D (4) B, D, E (5) C, D, E

2575

**28.** யோசப்வாஸ் அடிகளார் பற்றிய மேல்வரும் கூற்றுகளைக் கருதுக.

A - இவர் கோவாவிலிருந்து வருகை தந்த ஓரற்ரோறியன் குழுமத்தின் குருவாவார்.
B - இலங்கையில் போர்த்துக்கேயர் ஆட்சிக் காலத்தில் மக்களுக்குப் பணியாற்றியவர்.
C - ஒல்லாந்தர் ஆட்சிக்காலத்தில் இலங்கைத் திருச்சபையைப் பாதுகாப்பதற்கு முன்னோடியாகச் செயற்பட்டவர்.
D - பல சிங்கள நூல்களை எழுதிய அறிஞராவார்.
E - இலங்கைத் திருச்சபையைக் கட்டியெழுப்ப அடித்தளமிட்ட, 'இலங்கைத் திருத்தூதர்' என அழைக்கப்படுபவர்.

மேற்குறித்த கூற்றுகளுள் சரியானவை

(1) A, B, C (2) A, C, E (3) B, C, D (4) B, D, E (5) C, D, E

**29.** மேல்வரும் கூற்றுகளைக் கருதுக.

A - எஸ். ஜி. பெரேரா அடிகள் இயேசு சபையைச் சார்ந்த முதல் இலங்கையராவார்.
B - ஆயர் எட்மன் பீரிஸ் சிங்கள இலக்கிய, வரலாற்று அறிஞராவார்.
C - மார்சலின் ஜெயக்கொடி அடிகள் ஒரு பிரபல எழுத்தாளராவார்.
D - பீற்றர் பிள்ளை அடிகள் கலைகளில் சிறந்த அறிஞராவார்.
E - நல்லூர் சுவாமி ஞானப்பிரகாசர் தமிழ் இலக்கியத்திலும் வரலாற்றிலும் சிறந்த அறிஞராவார்.

மேல்வருவனவற்றுள் **தவறான** கூற்றுகள்

(1) A யும் B யும் (2) A யும் E யும் (3) B யும் C யும்
(4) C யும் D யும் (5) D யும் E யும்

**30.** திருச்சபை மனித நேயப் பணிகளில் கட்டாயம் ஈடுபட வேண்டும் என்பதற்கான காரணம் யாது ?

(1) கிறிஸ்தவத்தைப் பரப்புவதற்கு இது ஓர் இலகுவான வழி என்பதனால் ஆகும்.
(2) இது மிசனரிமாரின் பொறுப்பு என்பதனால் ஆகும்.
(3) இது இறைவனின் அன்பை வெளிப்படுத்துவதற்கான வழியும் இறை அரசை அறிவிப்பதன் முக்கிய அம்சமும் என்பதனால் ஆகும்.
(4) ஆரம்பத் திருச்சபை மனிதநேயப் பணிகளில் ஈடுபட்டமை ஆகும்.
(5) இது கிறிஸ்தவர் அல்லாதோரின் கவனத்தை ஈர்ப்பதற்கான வழி என்பதனால் ஆகும்.

**31.** வெளிநாட்டு மிசனறிமார் இலங்கையில் ஆற்றிய பணிகளில் முக்கியமான மூன்றைக் கொண்ட தொகுதி

(1) கல்வி, தொழினுட்பக்கல்வி, வைத்தியசாலை சேவைகள்
(2) வைத்தியசாலை, நற்செய்தியைப் போதித்தல், தொழினுட்பக்கல்விச் சேவைகள்
(3) கல்வி, வைத்தியசாலை, நற்செய்தியைப் போதித்தல் சேவைகள்
(4) நற்செய்தியைப் போதித்தல், அநாதைகளைப் பராமரித்தல், இளைஞர்களை வழிநடத்தல் சேவைகள்
(5) அநாதைகளைப் பராமரித்தல், தொழினுட்பக்கல்வி, சிறுவர் சேவைகள்

**32.** மேல்வருவனவற்றுள் ஆசிர்வாதப்பர் துறவறத்தினரின் பண்பு **அல்லாதது**

(1) செபமும் வேலையும்
(2) விவிலியமும் இலத்தீன் மொழியும் இலக்கியமும் கற்பித்தமை
(3) மடங்களை அண்மித்து பாடசாலைகளை நிறுவியமை
(4) பழைய ஏடுகளைப் பிரதி எடுத்தமை
(5) மடத்தின் ஒதுங்கிய சிறு அறைகளில் செபித்தமை

**33.** இரவலர் சபைகள் பற்றிய மேல்வரும் கூற்றுகளைக் கருதுக.

A - நற்செய்தி கூறும் ஏழ்மையை திருச்சபைக்குள் மீண்டும் ஏற்படுத்துதல்
B - சிலுவைப்போர் காரணமாக ஆன்மீகச் செயற்பாடுகளில் கவனம் செலுத்தப்படாமை
C - ஐரோப்பாவின் செல்வச் செழிப்பால் திருச்சபையில் ஏற்பட்ட உலகியல் போக்கு
D - மக்கள் புதிய துறவற சபைகளின் உருவாக்கத்தை விரும்பியமை
E - அக்காலத்து துறவற சபைகள் பழமைப்பட்டிருந்தமை

இவற்றுள் இரவலர் சபைகளின் தோற்றத்திற்கான காரணங்களைக் கொண்ட கூற்றுகள்

(1) A, B, C (2) A, C, E (3) B, C, D (4) B, D, E (5) C, D, E

**34.** பிரான்சிஸ்கன் சபைத் துறவிகளின் வாழ்க்கையுடன் தொடர்பு **அற்றது**

(1) எளிமையான வாழ்க்கை முறை
(2) தனிச்சொத்துக்கு உரிமை கோராமை
(3) இரந்து அன்றாட உணவைத் தேடுதல்
(4) விவசாயப் பண்ணைகளை நிருவகித்தல்
(5) நற்செய்தி ஏழ்மையை வாழ்தல்

**35.** அருட்பணி ரெயார்ட் டே சார்டேன்
(1) அருட்பணியாளர், தத்துவஞானி, வரலாற்று ஆசிரியர்
(2) புதைந்து கிடக்கும் புராதன கால மிருகம், தாவரம் பற்றிய ஆய்வாளர், தத்துவஞானி, புவியின் அமைப்பியல் ஆய்வாளர்
(3) புவியின் அமைப்பியல் ஆய்வாளர், வரலாற்றாசிரியர், இலக்கிய நிபுணர்
(4) அருட்பணியாளர், இறையியல் வல்லுனர், இலக்கிய நிபுணர்
(5) இறையியல் வல்லுனர், புதைந்து கிடக்கும் புராதன கால மிருகம், தாவரம் பற்றிய ஆய்வாளர், வரலாற்றாசிரியர்

**36.** வழிபாட்டில் கலப்பு இசை முறையை அறிமுகம் செய்த நாடு
(1) இத்தாலி (2) பிரான்ஸ் (3) ஜேர்மனி (4) கிரேக்கம் (5) இங்கிலாந்து

**37.** கிறிஸ்தவக் கட்டடக்கலையின் ஆரம்பகாலமாகக் கொள்ளத்தக்கது,
(1) கிறிஸ்தவ மறைக்குச் சமயச் சுதந்திரம் கிடைத்த காலம் ஆகும்.
(2) கொன்ஸ்தாந்திநோபிள் உரோமையப் பேரரசின் தலைநகராக மாற்றப்பட்ட காலம் ஆகும்.
(3) உரோமைப் பேரரசு நிறுவப்பட்ட காலம் ஆகும்.
(4) பிரான்ஸில் கிறிஸ்தவம் அறிமுகப்படுத்தப்பட்ட காலம் ஆகும்.
(5) மகா அலெக்சாண்டரின் ஆட்சிக்காலம் ஆகும்.

**38.** நீர்கொழும்பு, புனித மரியா தேவாலயத்தில் காணப்படும் விவிலிய நிகழ்வுகளைக் காட்சியாக வரைந்த கலைஞர்
(1) போல் நவரத்தின (2) கென்றிக்கஸ்
(3) டேவிட் பெயின்ரர் (4) என். எஸ். கொடமான்ன
(5) றிச்சட் கேப்ரியேல்

**39.** உள்நாட்டு நாடகங்களின் வளர்ச்சிக்குப் பங்களிப்புச் செய்த தூவ பாடுகளின் நாடகத்தில் செல்வாக்குச் செலுத்தியது
(1) ஜேர்மன் நாட்டு ஒபரமர்காவு பாடுகளின் நாடகம்
(2) உள்நாட்டு கோலம் பாரம்பரியம்
(3) ஸ்பெயின், போர்த்துக்கல் நாட்டு சமய நாடகப் பாரம்பரியம்
(4) கோவா நகர் சமய நாடகப் பாரம்பரியம்
(5) தென்னிந்திய நாடகப் பாரம்பரியம்

**40.** மேல்வருவனவற்றுள் கத்தோலிக்க திருச்சபையின் சமூகப் படிப்பினையில் **இடம்பெறாத** விடயங்களைத் தெரிவுசெய்க.
(1) மனிதரே சமூக, பொருளாதார வாழ்வின் மையமாக விளங்க வேண்டும்.
(2) தொழினுட்ப, தொழிற்றிறன் முன்னேற்றம் மனிதர்களின் நன்மைக்கானதாக இருக்க வேண்டும்.
(3) தொழிலாளர்கள் தமது பணிகளின் மூலம் தம்மை வளர்த்துக் கொள்ள வாய்ப்பு வழங்கப்பட வேண்டும்.
(4) தொழிலாளர்களுக்கு அவர்கள் செய்யும் வேலைக்கேற்ற நியாயமான ஊதியம் கிடைக்க வேண்டும்.
(5) தனியார் சொத்துக்கள் தேசிய மயமாக்கப்படல் வேண்டும்.

**41.** குடும்ப வாழ்வின் தன்மை, நோக்கம் என்பன பற்றிய மேல்வரும் விடயங்களைக் கருதுக.
A - கணவன், மனைவிக்கிடையிலான அன்பு
B - திருமண அன்பை வளர்ப்பதற்காக அதிக குழந்தைகளைப் பெற்றெடுத்தல்
C - குடும்ப ஒற்றுமைக்காக கணவனின் தலைமைத்துவத்தை ஏற்றல்
D - திருமண அன்பின் விளைவாகப் பிள்ளைகளை ஏற்றல்
E - பிள்ளைகளுக்குக் கல்வி வழங்குதல் பெற்றோரின் கடமையாகக் கொள்ளல்

இவற்றுள் திருமணம் தொடர்பான கத்தோலிக்கத் திருச்சபையின் படிப்பினைகளை மாத்திரம் உள்ளடக்கிய தொகுதி யாது ?
(1) A, B, C (2) A, D, E (3) B, C, D (4) B, D, E (5) C, D, E

**42.** ஆசிய ஆயர் பேரவையின் (FABC) படிப்பினைகளில் **காணப்படாத** செயற்பாடு யாது ?
(1) இரண்டாம் வத்திக்கான் சங்கத்தின் கொள்கைகளுக்கேற்ப ஆசியாவிற்குப் பொருத்தமான பணியை மேற்கொள்ளல்
(2) மனிதரின் ஒருங்கிணைந்த வளர்ச்சிக்குப் பங்களிப்புச் செய்தல்
(3) ஆசிய திருச்சபைகள் ஆசிய ஆயர்கள் மத்தியில் நெருக்கமான பிணைப்பை ஏற்படுத்துதல்
(4) குருக்கள் கட்சி அரசியலில் ஈடுபடுவதை ஊக்குவித்தல்
(5) பன்மத உரையாடல், கிறிஸ்தவ ஒன்றிப்பு ஆகியவற்றிற்காகச் செயற்படல்

**43.** முதலாவது உலக கிறிஸ்தவ சபைகளின் சம்மேளம் (WCC) கூட்டப்பட்ட இடம்
(1) நெதர்லாந்தின் அம்ஸ்டடாம் நகரம் (2) ஸ்கொட்லாந்தின் எடின்பறோ நகரம்
(3) இந்தியாவின் கல்கத்தா நகரம் (4) சுவிற்சர்லாந்தின் ஜெனீவா நகரம்
(5) பெல்ஜியத்தின் பிறசெல்ஸ் நகரம்

[பக். 6 ஐப் பார்க்க

**44.** மேல்வருவனவற்றுள் இரண்டாம் வத்திக்கான் சங்கம் கூட்டப்பட்டதில் செல்வாக்குச் செலுத்திய காரணம் **அல்லாதது**
(1) திருச்சபையை நவீன உலகிற்குப் பொருளுடையதாக்குவது
(2) திருச்சபைக்குள் புதுப்பித்தலை ஏற்படுத்துவது
(3) இறைமக்களை உருவாக்குவது
(4) பேதகங்களைக் கண்டிப்பது
(5) கிறிஸ்தவ சபைகளிடையே ஒன்றிப்பை ஊக்கப்படுத்துவது

**45.** மேல்வரும் கூற்றுகளைக் கருதுக.
A - திருமணத்தினதும் குடும்ப வாழ்வினதும் மாண்பை மதித்தல்
B - சமூகப் பொருளாதார வாழ்வை மேம்படுத்துதல்
C - வழிபாட்டில் புதுப்பித்தலை ஏற்படுத்துதல்
D - உண்மையான கலாசார விருத்தி
E - கல்வியை மேம்படுத்துதல்
இவற்றுள் இன்றைய உலகில் திருச்சபை என்னும் மேய்ப்புப்பணி தீர்மானத் தொகுப்பில் இடம்பெறுவன
(1) A, B, D (2) A, C, E (3) B, C, D (4) B, D, E (5) C, D, E

**46.** மேல்வரும் கூற்றுகளைக் கருத்திற் கொள்க.
A - ஆசியத் திருச்சபைகளுக்கிடையில் ஒத்துழைப்பை அதிகரித்தல்
B - ஆசியாவிலுள்ள எல்லாச் சபைகளையும் இணைத்து ஒரு திருச்சபையாகக் கட்டியெழுப்புதல்
C - திருச்சபைகளுக்குள் மேலும் பிளவுகள் ஏற்படாமல் தடுத்தல்
D - அரசியற் கருத்து வேறுபாடுகள் காரணமாக பிரிந்து சென்ற சபைகளை ஒருங்கிணைக்க முயற்சித்தல்
E - கத்தோலிக்க திருச்சபையையும் நற்செய்திச் சபைகளையும் இணைப்பதற்குரிய செயற்பாடுகளைத் திட்டமிடுதல்
இவற்றுள் ஆசிய திருச்சபைகளின் சம்மேளனத்தின் படிப்பினைகளைப் பிரதிபலிக்கும் கூற்றுகள்
(1) A, B, C (2) A, D, E (3) B, C, D (4) B, C, E (5) C, D, E

**47.** மேல்வரும் கூற்றுகளைக் கருதுக.
A - கிறிஸ்தவர்கள் மத்தியில் ஒற்றுமையைக் கிறிஸ்துவே விரும்பினார்.
B - கிறிஸ்தவ சபைகள் மத்தியிலான பிரிவினை ஒரு பிழையான மாதிரியாகும்.
C - கிறிஸ்தவ ஒன்றிப்பு அமைப்பில் வலுவான திருச்சபைகளுக்கு முன்னுரிமை வழங்கப்பட வேண்டும்.
D - கிறிஸ்தவ ஒன்றிப்பு இல்லாது நற்செய்திக்குச் சான்று பகரமுடியாது.
E - திருச்சபையின் பன்மைத் தன்மைக்கு கிறிஸ்தவ ஒன்றிப்பு தடையானது.
இவற்றுள் கிறிஸ்தவ ஒன்றிப்பு பற்றிய சரியான கூற்றுகளாகக் கருதத்தக்கவை
(1) A, B, C (2) A, B, D (3) B, C, D (4) B, C, E (5) C, D, E

**48.** மேல்வருவனவற்றுள் புனித அகுஸ்தீனார் எழுதிய நூல்களை மாத்திரம் கொண்ட தொகுதியைத் தெரிவுசெய்க.
(1) இறைவனின் நகரம், கிறிஸ்துவழி வாழ்வு, மூவொரு இறைவன்
(2) இறைவனின் நகரம், கிறிஸ்துவழி வாழ்வு, ஆன்மீகக் கீதம்
(3) இறைவனின் நகரம், மூவொரு இறைவன், தன் நிலை ஏற்பு
(4) கிறிஸ்துவழி வாழ்வு, மூவொரு இறைவன், ஆன்மீகக் கீதம்
(5) மூவொரு இறைவன், ஆன்மீகக் கீதம், தன் நிலை ஏற்பு

**49.** போர்த்துக்கேயர் காலத்தில் இலங்கைக் கல்வித்துறையில் புதிய திருப்பம் ஏற்படக் காரணம்
(1) அனுபவம் வாய்ந்த துறவிகள் ஆசிரியர்களாகப் பணியாற்றியமை
(2) மேற்கத்தேய கல்வி முறை இலங்கையில் அறிமுகம் செய்யப்பட்டமை
(3) கோவில் பற்றுப் பாடசாலைகள் நிறுவப்பட்டமை
(4) பாடசாலைப் பாடவிதானத்தில் மறைக்கல்விக்கு முக்கியத்துவம் வழங்கப்பட்டமை
(5) வாசிப்பு, எழுத்து, எண்கணிதம், இலத்தீன், நற்பழக்க வழக்கங்கள் போதிக்கப்பட்டமை

**50.** புனித அகுஸ்தீனார் பற்றிய **பிழையான** கூற்று யாது ?
(1) இலத்தீன் மரபுத் திருச்சபையில் மிகவும் திறமையான தந்தையாவார்.
(2) 'தன் நிலை ஏற்பு' என்னும் நூலில் தனது இளம் பருவம் பற்றி எழுதியுள்ளார்.
(3) வாழ்வின் ஒரு நிலையில் மனிக்கேய பேதகத்தைப் பின்பற்றினார்.
(4) கிரேக்க மெய்யியலுக்கு எதிராகப் பல நூல்களை எழுதினார்.
(5) தூய திரித்துவம் பற்றி அதிக விடயங்களை எழுதியுள்ளார்.

* * *

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2017 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2017 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2017

ක්‍රිස්තියානි ශිෂ්ටාචාරය II
கிறிஸ்தவ நாகரிகம் II
Christian Civilization II

49 T II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

**அறிவுறுத்தல்கள் :**

※ பகுதி **I** இல் எவையேனும் **இரண்டு** வினாக்களையும் பகுதி **II** இல் எவையேனும் **மூன்று** வினாக்களையும் தெரிவுசெய்து, எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக.

※ ஒவ்வொரு வினாவுக்கும் **20** புள்ளிகள் உரித்தாகும்.

## பகுதி I

**1.** (i) மத்திய யுகத்தில் திருச்சபைத் தலைவர்கள் பெரும்பாலும் லௌகீகத் தேவைகளுக்கு முக்கியத்துவம் அளித்ததுடன் சீரற்ற வாழ்க்கை வாழ்ந்தனர். அவர்களின் வாழ்க்கையில் காணக்கிடைத்த **நான்கு** சீரகேடுகளைக் குறிப்பிடுக.

(ii) இரண்டாம் வத்திக்கான் பொதுச்சங்கம் வெளியிட்ட ஏதேனும் **நான்கு** ஏடுகளைப் பெயரிடுக.

(iii) இலங்கையில் கத்தோலிக்க மறையைப் பரப்புவதற்குப் போர்த்துக்கேய மிசனரிமார் கடைப்பிடித்த **நான்கு** வழிவகைகளைக் குறிப்பிடுக.

(iv) ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் புரட்டஸ்தாந்து திருச்சபையினர் இலங்கையில் ஆற்றிய **நான்கு** பணிகளை எழுதுக.

(v) இலத்தீன் மரபுத் திருச்சபைக்கும் ஓர்தடொக்ஸ் மரபுத் திருச்சபைக்குமிடையில் காணப்படும் **இரண்டு** பொதுப் பண்புகளையும் **இரண்டு** வேறுபாடுகளையும் தருக.

**2.** (i) இஸ்ரயேலில் அரசாட்சி ஆரம்பித்தமைக்கான **நான்கு** காரணங்களைத் தருக.

(ii) தாவீது அரசனின் ஆட்சிக் காலத்தில் இஸ்ரவேல் தேசத்தில் இடம்பெற்ற **நான்கு** சமூக அபிவிருத்திகளைத் தருக.

(iii) கி.மு. முதலாம் நூற்றாண்டில் கிறிஸ்தவத்தைத் தழுவிய சமூகங்கள் மத்தியில் இடம்பெற்ற **நான்கு** சமூக மாற்றங்களைக் குறிப்பிடுக.

(iv) கி.பி. 4ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்துடன் திருச்சபையில் ஏற்பட்ட **நான்கு** மாற்றங்களைத் தருக.

(v) 21ஆம் நூற்றாண்டில் உலக சமாதானத்தை ஏற்படுத்துவதற்காக கிறிஸ்தவ சபையினால் எடுக்கப்பட வேண்டிய நடவடிக்கைகள் **நான்கு** எழுதுக.

**3.** (i) அந்தியோக்கிய கல்விக்கூடத்தின் **நான்கு** பண்புகளைத் தருக.

(ii) புனித யோசப்வாஸின் மறைபரப்பு செயன்முறைகளிலிருந்து இலங்கைத் திருச்சபை பெற்றுக்கொள்ளக்கூடிய **நான்கு** படிப்பினைகளைத் தருக.

(iii) உரோமைய வழிபாட்டு மரபு கிறிஸ்தவத்தில் செல்வாக்குச் செலுத்தியுள்ளமைக்கான **நான்கு** எடுத்துக்காட்டுகளைத் தருக.

(iv) டொமினிக்கன் துறவற சபையினர் திருச்சபையின் மேம்பாட்டிற்காக ஆற்றிய **நான்கு** பங்களிப்புகளைத் தருக.

(v) இலங்கையின் கலை மேம்பாட்டிற்கு கிறிஸ்தவர்கள் வழங்கிய பங்களிப்புகளுக்கான **நான்கு** எடுத்துக்காட்டுகளைத் தருக.

## பகுதி II

**4.** புனித பவுல் கிறிஸ்தவ விசுவாசம், நடத்தை என்பன பற்றிய தெளிவை ஏற்படுத்தி ஆரம்பகாலக் கிறிஸ்தவ சமூகங்களை மேம்படுத்தினார்.

(i) "கிறிஸ்தவ குடும்பம் அன்பினதும் ஒற்றுமையினதும் உறைவிடம்" என்ற கூற்றினை விளக்குக.

(ii) தூய ஆவியின் அருங்கொடைகள் ஒரு கிறிஸ்தவனை எவ்வாறு வளம்பெறச் செய்கின்றன என்பதனை விளக்குக.

(iii) இறந்தோரின் உயிர்ப்பு உடலின் உயிர்ப்பு பற்றியது என்னும் கிறிஸ்தவ விசுவாசத்தை I கொரிந்தியர் 15 இன் படிப்பினைகளை அடிப்படையாகக் கொண்டு விளக்குக.

(iv) கிறிஸ்துவின் தலைமைத்துவமே கிறிஸ்தவ தலைமைத்துவத்திற்கு அடிப்படையாகும். இதனை புனித பவுலின் படிப்பினையை அடிப்படையாகக் கொண்டு விளக்குக.

[பக். 2 ஐப் பார்க்க

**5.** ஒரு கலாசாரத்தின் பரிணாமம் ஏனைய கலாசாரக் கூறுகளை உள்வாங்குகின்றது.

(i) யூப்பிரதீஸ் - தைக்கிறிஸ் நதிக்கரை நாகரிகம் பற்றி விளக்குக.

(ii) யூத நாகரிகம் எவ்வாறு நைல்நதி நாகரிகத்தின் செல்வாக்கிற்குட்பட்டது என்பதனை விபரிக்குக.

(iii) கிரேக்க நாகரிகங்கள் யூத நாகரிகத்தில் ஏற்படுத்திய செல்வாக்கினை விளக்குக.

(iv) இலங்கைக் கலாசாரம் எவ்வாறு கிறிஸ்தவக் கலாசாரத்தினால் செழிப்புற்றதென்பதனை விளக்குக.

**6.** இலங்கையில் கிறிஸ்தவத்தைப் பரப்புவதற்கு மிசனரிமார் பொருத்தமான வலுவான ஊடகங்களைக் கையாண்டுள்ளனர்.

(i) மிசனரிமார் சுதேசிகளின் மொழியைக் கற்று மறைபரப்புப் பணியாற்றியதன் மூலம் பெற்றுக்கொண்ட நன்மைகள் பற்றி விளக்குக.

(ii) இலங்கையில் பாஸ்கா நாடகம் கிறிஸ்தவத்திற்கும் கிறிஸ்தவக் கலைகளின் முன்னேற்றத்துக்கும் வழங்கிய பங்களிப்பை விவரிக்குக.

(iii) கிறிஸ்தவ மறையைப் பரப்புவதில் கல்வி எவ்வாறு சிறந்த ஊடகமாக விளங்கியதென்பதனை விளக்குக.

(iv) "கிறிஸ்தவ மறையைப் பரப்புவதில் மனிதநேயப் பணிகள் மிக முக்கியமானவை." விளக்குக.

**7.** துறவுசார், துறவு மடம்சார் அமைப்புகள் ஆன்மீக, சமூக வளர்ச்சிக்குக் கணிசமான பங்களிப்பை வழங்கியுள்ளன.

(i) துறவு மடம்சார் வாழ்வின் பண்புகளை விவரிக்குக.

(ii) ஐரோப்பிய சமூகத்தைக் கட்டியெழுப்புவதில் ஆசீர்வாதப்பர் சபையினரின் பங்களிப்புகளை விவரிக்குக.

(iii) திருச்சபையின் மறைபரப்புப் பணிக்கு இயேசு சபையினர் வழங்கிய பங்களிப்பை விளக்குக.

(iv) லௌகீக அல்லது சமயச் சார்பற்ற சமூகத்தில் துறவிகளின் சாட்சிய வாழ்வு பற்றி விளக்குக.

**8.** திருச்சபையானது கல்வியின் மூலம் சமூக, சமய, அறநெறி மேம்பாட்டிற்குப் பங்களிப்புச் செய்துள்ளது.

(i) "கி.பி. 1050 - 1300 காலப்பகுதியில் திருச்சபை கல்வித்துறையில் பல்வேறு முற்போக்கான மாற்றங்களை ஏற்படுத்தியது." ஆராய்க.

(ii) போர்த்துக்கேய மிசனரிமாரின் வருகைக்கு முன்பு இலங்கையின் பாரம்பரியக் கல்வி முறையில் காணப்பட்ட குறைபாடுகளை எடுத்துக்காட்டுக.

(iii) மேலே (ii) இல் நீர் குறிப்பிட்ட குறைபாடுகளை நிவர்த்திசெய்வதற்காக போர்த்துக்கேய மிசனரிமார் எவ்வாறான வழிவகைகளைக் கையாண்டனர் என்பதனை விவரிக்குக.

(iv) மறைக்கல்வி வழங்கல், முழுமையான கிறிஸ்தவ உருவாக்கத்திற்கு எவ்வாறு பங்களிப்புச் செய்கின்றதென விளக்குக.

* * *